உ௦—ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி

போற்றுகின்றோம்; நாங்கள் கடைத்தேற ஆட்கொண்டு அருளும் தங்கக் கால்களை.

வணங்கி, யாம் மார்கழித் திங்கள், நீராட்டத்தை ஆடுவோமாக.

பாதமலர், செந்தளிர்கள், பொற்பாதம், பூங்கழல்கள், இணையடிகள், புண்டரிகம், பொன் மலர்கள் ஆகிய அனைத்தும் இறைவனுடைய திருவடிச் சிறப்பைக் குறிப்பன. திருவெம்பாவை முதற் பாட்டு "ஆதியும் அந்தமும்" என்று தொடங்குகிறது. திருவெம்பாவைக் கடைசிப் பாட்டு "ஆதியாம் பாதமலர்" என்றும் "அந்தமாம் செந்தளிர்கள்" எனவும் முடிகிறது.

**திருவெம்பாவை**
**முற்றுப் பெறுகிறது.**

## திருப்பாவை—க

மார்கழித் திங்கள்
　　மதிநிறைந்த நல்நாளால் ;
நீர்ஆடப் போதுவீர் !
　　போதுமினோ, நேர்இழையீர் !
சீர்மல்கும் ஆய்ப்பாடிச்
　　செல்வச் சிறுமீர்காள் !
கூர்வேல் கொடுந்தொழிலன்
　　நந்தகோ பன்குமரன்,
ஏர்ஆர்ந்த கண்ணி
　　யசோதை இளம்சிங்கம்,
கார்மேனிச் செங்கண்
　　கதிர்மதியம் போல்முகத்தான்,
நாரா யணனே
　　நமக்கே பறைதருவான் ;
பாரோர் புகழப்
　　படிந்தேல்,ஓர் எம்பாவாய் !

**முதலாவது பாட்டின் பொருள்**

**மாணிக்க வாசகர், கடைசிப் பாட்டில், "மார்கழி நீர் ஆடேல் ஓர் எம்பாவாய்" என முடிக்கின்றார். ஆண்டாள், முதற் பாட்டில், "மார்கழித் திங்கள்" என்று தொடங்குகின்றார்.**

நேரான நகையை அணிந்த பெண்களே! சிறப்பு நிறைந்த ஆயர்பாடியிலே உள்ள செல்வச் சிறுமிகளே!

கூர்மையான வேலைக் கொண்ட கொடுந் தொழிலுடையவனான நந்தகோபாலன் மகனும், எழில் நிறைந்த கண்களையுடைய யசோதைப் பிராட்டியின் இளஞ் சிங்கமும், கரிய திருமேனி-யும் சிவந்த கண்களும் ஒளிமிக்க சந்திரன் போன்ற முகமும் பெற்றவனாகிய நாராயணனா-வன், நாம் விரும்பிய பொருளையெல்லாம் தருவான்; இம் மார்கழி மாதத்தில் முழுமதி விளங்கித் தோன்றும் பௌர்ணமி நாளாகிய இன்று, உலகத்தாரெல்லாம் புகழுமாறு குடைந்து நீராடப் போகின்றவர்களே! வாருங்கள்.

## திருப்பாவை—உ

வையத்து வாழ்வீர்காள் !
 நாமும்நம் பாவைக்கு,
செய்யும் கிரிசைகள்
 கேளீரோ, பாற்கடலுள்
பையத் துயின்ற
 பரமன் அடிபாடி,
நெய்உண்ணோம் ; பால்உண்ணோம் ;
 நாட்காலே நீராடி,
மையிட்டு எழுதோம் ;
 மலர்இட்டு நாம்முடியோம் ;
செய்யா தனசெய்யோம் ;
 தீக்குறளைச் சென்றுஓதோம் ;
ஐயமும் பிச்சையும்
 ஆம்தனையும் கைகாட்டி,
உய்யுமாறு எண்ணி
 உகந்தேல்,ஓர் எம்பாவாய் !

### உ—ஆவது பாட்டின் பொருள்

பூமியில் வாழுகின்றவர்களே! நாங்கள் நமது நோன்புக்குச் செய்கின்ற காரியங்களைச் சொல்லுகின்றோம்; கேளுங்கள்.

திருப்பாற் கடலிலே மெதுவாகக் கண் வளர்கின்ற கடவுளது திருவடிகளைப் பாடிக் கொண்டிருப்போம்; நெய் சாப்பிடமாட்டோம்; பால் பருகமாட்டோம்; அதிகாலையில் நீராடு-வோம்; கண்கட்கு மைப் பூசமாட்டோம்; கூந்த-லுக்குப் பூ முடிக்கமாட்டோம்; செய்யத்தகாத எதையும் செய்யமாட்டோம்; தீமை தரும் பொய்-களை எங்கும் சென்று பேசமாட்டோம்; ஐயமும் பிச்சையும் எவ்வளவு முடியுமோ, அவ்வளவும் கொடுப்போம்; இவ்வாறு அனைத்தும் செய்து கடைத்தேறும் வகையை எண்ணி மகிழ்வோம்.

ஐயம், பிச்சை இரண்டும் வேறாகக் கொள்-ளப்பட் டிருக்கின்றது. ஐயம், இல்லறத்தார்க்கும், பிச்சை, மற்றவர்க்கும் இடப்படுவது என்று இங்குக் கருதப்பட்டிருப்பதாக நினைக்கலாம்.

கைகாட்டுதல், எடுத்துக் கொடுத்தல் என்னும் பொருளது.

"வையத்து வாழ்வீர்காள்" என்று கூறுங்-கால், "வையத்து வாழ்வாங்கு வாழ்பவன்" என்ற குறட்பகுதி ஆண்டாள் மனத்தில் தோன்றி யிருத்தல் வேண்டும்.

## திருப்பாவை—௩

ஓங்கி உலகுஅளந்த
உத்தமன் பேர்பாடி,
நாங்கள்நம் பாவைக்குச்
சாற்றிநீர் ஆடினால்,
தீங்குஇன்றி நாடுஎல்லாம்
திங்கள்மும் மாரிபெய்து,
ஓங்கு பெரும்செந்நெல்
ஊடு கயல்உகள,
பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்ப,
தேங்காதே புக்குஇருந்து
சீர்த்த முலைபற்றி,
வாங்கக் குடம்நிறைக்கும்
வள்ளற் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம்
நிறைந்தேல்,ஓர் எம்பாவாய்!

## ௩-ஆவது பாட்டின் பொருள்

நீண்டு உலகத்தை அளந்த உத்தமனாகிய திருமாலின் பெயரைப்பாடி, நாம் நமது நோன்பிற்கு வேண்டியவற்றைச் சொல்லி நீராடினோமானால், தீமையில்லாமல் நாடு முழுதும் மாதம் மூன்று மழை பொழியும்; அதனால் செந்நெல் பருத்து ஓங்கி வளரும்; அதன் நடுவிலே கயல் மீன்கள் துள்ளி விளையாடும்; அவ் வயல் நீரிலே முளைத்திருக்கின்ற அழகிய நீலோற்பலப் பூவிலே, புள்ளிகளையுடைய வண்டுகள் மதுவைக் குடித்து மறந்து உறங்கும்; கட்டுத்துறையுள் புகுந்து அங்கு அமர்ந்து, பருத்துச் சிறப்பாக அமைந்திருக்கின்ற காம்பைப் பிடித்து இழுக்க, தேக்கி ஒளித்து வைத்துக் கொள்ளாமல் குடங்களை நிறைக்கும், வள்ளல் தன்மை வாய்ந்த பெரிய பசுக்கள். இத்தகைய நீங்காத சம்பத்துப் பெருகும்.

ஆழி மழைக்கண்ணா!
ஒன்றும்நீ கைகரவேல் ;
ஆழியுள் புக்கு,
முகந்துகொடு, ஆர்த்துஏறி,
ஊழி முதல்வன்
உருவம்போல் மெய்கறுத்து,
பாழிஅம் தோள்உடைப்
பத்மநா பன்கையில்
ஆழிபோல் மின்னி,
வலம்புரிபோல் நின்றுஅதிர்ந்து,
தாழாதே சார்ங்கம்
உதைத்த சரமழைபோல்.
வாழ உலகினில்
பெய்திடாய் ; நாங்களும்
மார்கழிநீர் ஆட
மகிழ்ந்தேல்,ஓர் எம்பாவாய்!

## ச-ஆவது பாட்டின் பொருள்

## மழைப் பாட்டு

ஆழி மழைக் கண்ணா!: கடலனைய பெருமை வாய்ந்த மழையாகிய கருணையாளனே! கொஞ்சங்கூட மறைக்காதே; கடலுக்குள் புகு-வாயாக; கடல் நீரை அள்ளிக்கொள்; ஆரவாரத்-தோடு மேலே எழு; ஊழிக் காலத்தும் அழியாது நிற்கும் முதல்வனாகிய திருமாலின் உருவத்தைப் போலக் கறுப்பு நிறத்தைப் பெறு; பருத்த அழகான தோள்களையுடைய அப் பத்மநாபன் கையில் பிடித்திருக்கின்ற சக்கரத்தைப் போல மின்னு; அப் பெருமானது வலம்புரிச் சங்கை ஒப்பப் பெரு முழக்கம் செய்; அந் நாராயணனது சாரங்கம் என்னும் வில்லினின்றும் உதை பட்டுக் கிளம்பிய அம்பு மாரி போல உலகெலாம் வாழக் காலந் தாழ்க்காமல் பொழி; நாங்களெல்லோரும் மகிழ்ந்து மார்கழி நீர் ஆடவேண்டும்

இங்கு ஆண்டாள், திருமால் "ஊழி முதல்வன்" என்று உரைக்கின்றார்; அங்கு

## ச–ஆவது பாட்டின் பொருள்—தொடர்ச்சி

மணிவாசகர், சிவன் "ஊழி முதல்வன்" எனக் கூறினர். "மார்கழிநீர் ஆட மகிழ்ந்தேல்ஓர் எம்பாவாய்" என்பது திருப்பாவை; "போற்றி-யாம் மார்கழிநீர் ஆடேல்ஓர் எம்பாவாய்" என்பது திருவெம்பாவை.

இந்த நாச்சியாரின் நான்காவது திருப்பாவை-யும், அடிகளின் "முன் இக் கடலைச் சுருக்கி" என்ற பதினரும் திருவெம்பாவையும் ஒத்த கருத்துடையன. இரண்டும் மழைவேண்டும் பாடல்கள். அது சைவ மழைப்பாட்டு; இது வைணவ மழைப்பாட்டு.

அங்கு மழைக்கு உமையவள் நிறம் உரைக்கப்பெற்றது; இங்கு, திருமால் நிறம் செப்பப்பட்டது. ஆண்டு மின்னலுக்குத் தேவி-யின் இடை உவமிக்கப்பட்டது; ஈண்டு விஷ்ணு-வின் சக்கரத்தாழ்வார் உவமை கூறப்படுகிறுர். அவ்விடத்து மேக முழக்கத்துக்கு அம்பிகையின் கிண்கிணி ஓசை ஒப்பிடப் பெற்றது; இவ்-

சு–ஆவது பாட்டின் பொருள்—தொடர்ச்சி

விடத்து நெடுமால் கையில் பிடித்து ஊதும் பாஞ்ச சன்ய ஒலி உவமையாக்கப்பெற்றது. திருவெம்பாவை, பார்வதியின் இன்அருளைப் போல மழை பொழிய வேண்டுகிறது; திருப்பாவை, நாராயணனின் வில்லினின்று கிளம்பும் பாணங்களைப் போல மழை கொட்டக் கேட்கிறது.

சைவ மழை பொழிந்தாலும் சரி; வைணவ மழை பொழிந்தாலும் சரி. மழை வேண்டும்.

"விசும்பில் துளிவீழின் அல்லால் மற்று ஆங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது"

## திருப்பாவை—ரு

மாயனை, மன்னும்
  வடமதுரை மைந்தனை,
தூய பெருநீர்
  யமுனைத் துறைவனை,
ஆயர் குலத்தினில்
  தோன்றும் அணிவிளக்கை,
தாயைக் குடல்விளக்கம்
  செய்ததா மோதரனை,
தூயோம்ஆய் வந்துநாம்
  தூமலர்கள் தூய்த்தொழுது,
வாயினல் பாடி,
  மனத்தினல் சிந்திக்க,
போய பிழையும்
  புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசுஆகும்;
  செப்பேல்,ஓர் எம்பாவாய்!

## ரு-ஆவது பாட்டின் பொருள்

மாயனை, நிலைபேறுடைய வடமதுரையில் பிறந்த மைந்தனை, பரிசுத்தமான நிறை நீரைப் பெற்ற யமுனை யாற்றின் கரையில் வளர்ந்தவனை, இடையர் குலத்திலே தோன்றிய அழகான விளக்குப் போன்றவனை, பெற்ற தாயின் குடல் எங்கும் விளங்கித் தோன்றுமாறு செய்த தாமோதரனை, தூய உடலும் உள்ளமும் கொண்டு வந்து நல்ல பூக்களைத் தூவி வணங்கி, வாயினால் அம் மூர்த்தியின் புகழ் பேசி, மனத்தினால் அப் பெருமான் திறத்தை நினைப்போமானால், முன் செய்த தவறுகளும் இனிச் செய்ய இருக்கும் பிழைகளும் நெருப்பில் இட்ட பஞ்சாக அழியும். ஆதலால் அவன் புகழைப் பாடு.

புள்ளும் சிலம்பினகாண்,
புள்அரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின்
பேர்அரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய்!
பேய்முலை நஞ்சுஉண்டு,
கள்ளச் சகடம்
கலக்குஅழியக் கால்ஓச்சி,
வெள்ளத்து அரவில்
துயில்அமர்ந்த வித்தினை,
உள்ளத்துக் கொண்டு
முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்தே
அரிஎன்ற பேர்அரவம்
உள்ளம் புகுந்து
குளிர்ந்தேல்,ஓர் எம்பாவாய்!

## சூ—ஆவது பாட்டின் பொருள்

**இது முதல் பத்துப் பாடல்கள் தூங்குபவர்களை எழுப்புவன.**

பறவைகள் கத்துகின்றன; கருடனை வாகனமாகக் கொண்ட தலைவனது கோயிலிலே, விடிவதை உணர்த்தித் துயில் எழுப்பும் வெண் சங்கின் பேரோசை உன் காதுகளில் விழவில்லையா? பெண்பிள்ளாய்! எழுந்திரு; பூதகியின் நச்சுப்பாலைக் குடித்து, வஞ்சகமாக வண்டி வடிவமாக வந்த அசுரன் கட்டு அழியுமாறு காலால் உதைத்து, பாற்கடலிலே பாம்பணை மீது அறிதுயில் கொண்ட, எல்லாப் பொருட்கும் விதையாக அமைந்தவனை, மனத்திலே இருத்தி, முனிவர்களும் யோகிகளும் மெதுவாக எழுந்தே, "அரி அரி" எனக் கூறும் பெருமுழக்கமானது எங்கள் உள்ளத்திலே புக, நாங்கள் குளிர்ச்சி அடைந்திருக்கின்றோம். இதனை ஏற்றுக் கொள்; ஆராய்ந்து பார்; எம்பாவையே!

## திருப்பாவை—எ

" கீசுகீசு " என்றுஎங்கும்
  ஆனைச்சாத் தன்,கலந்து
பேசின பேச்சுஅரவம்
  கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே!
காசும் பிறப்பும்
  கலகலப்பக் கைபேர்த்து,
வாச நறும்குழல்
  ஆய்ச்சியர், மத்தினல்
ஓசைப் படுத்த
  தயிர்அரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்!
  நாரா யணன்மூர்த்தி,
கேசவனைப் பாடவும்நீ
  கேட்டே கிடத்தியோ?
தேசம் உடையாய்!
  திறவேல்,ஓர் எம்பாவாய்!

## எ—ஆவது பாட்டின் பொருள்

"கீசுகீசு" என இரைந்து கொண்டு கரிக் குருவிகள் சேர்ந்து கத்துகின்ற ஓசை கேட்க வில்லையா உனக்கு? தூக்கப் பேய் பிடித்த பெண்ணே!

அச்சுத் தாலியும் முளைத்தாலியும் கலகல என ஒலிக்க, கையைத் திரட்டி மாற்றி மாற்றி, மணம் வீசும் நல்ல கூந்தலையுடைய இடையர் பெண்கள், மத்தினாலே கடைகிற தயிர் ஓசையும் கேட்க வில்லையா? பெண்கள் தலைவியே! நாராயணனாகிய மூர்த்தியை—கேசவனை நாங்கள் பாடுகின்றோம்; நீ கேட்டுக் கொண்டே படுக்கையில் கிடக்கின்றாயா?

ஒளியுடையவளே! திற கதவை.

கீசுகீசு, ஒலிக் குறிப்பு.
ஆனைச்சாத்தன்: கரிக்குருவி.
காசு: அச்சுத்தாலி.
பிறப்பு: முளைத்தாலி.

## திருப்பாவை—அ

கீழ்வானம் "வெள்"என்று
எருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் ;
மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப்
போகாமல் காத்து.உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம்;
கோது குலம்உடைய
பாவாய் ! எழுந்திராய்;
பாடிப் பறைகொண்டு,
மாவாய் பிளந்தானை,
மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச்
சென்றுநாம் சேவித்தால்,
ஆவாஎன்று ஆராய்ந்து
அருளேல்,ஓர் எம்பாவாய் !

## அ—ஆவது பாட்டின் பொருள்

கீழ் வானமானது வெளுத்ததாக, எருமைகள் காலையில் சிறு விடுதலை பெற்று, மேயும் பொருட்டு, பரவி யிருக்கின்றன. வழிபாட்டுக்குச் சென்றவர்கள் தவிர, மிச்சப் பேர் போகின்றவரையும் போகாமல் காத்துக் கொண்டு வந்து, உன் வாசலில் உன்னைக் கூப்பிடுதற்கு நின்றோம்; உள்ளக் களிப்பு வாய்ந்த பெண்ணே! எழுந்திருப்பாயாக.

குதிரை வடிவமாக வந்த அசுரனுடய வாயைப் பிளந்தவனை, மல்லர்களை அழித்த, இறைவர்கட்கெல்லாம் இறைவனை அடைந்து, பாடி, பறையைப் பெற்றுக் கொண்டு, நாம் சேவை செய்வோமானால், ஆ! வா, என்று அழைத்து, நம் காரியத்தை ஆராய்ந்து அருள் சுரப்பான்.

காலையில் பால் கறப்பதற்கு முன் சிறிது நேரம் அவிழ்த்து விடப்படுவது "சிறு வீடு" என்று கூறப்பட்டது.

சிறு வீடு: இளமேய்ச்சல்.

கடைசிஅடியில் அருளும் என்பது குறைந்து அருள் என நின்றது.

## திருப்பாவை—கூ

தூமணி மாடத்துச்
சுற்றும் விளக்குஎரிய,
தூபம் கமழத்
துயில்அணைமேல் கண்வளரும்
மாமான் மகளே !
மணிக்கதவம் தாள்திறவாய்.
மாமீர் ! அவளை
எழுப்பீரோ ; உம்மகள்தான்
ஊமையோ ? அன்றிச்
செவிடோ ? அனந்தலோ ?
ஏமப் பெருந்துயில்
மந்திரப் பட்டாளோ ?
மாமாயன் மாதவன்
வைகுந்தன் என்றுஎன்று
நாமம் பலவும்
நவின்றேல்,ஓர் எம்பாவாய் !

## ௲-ஆவது பாட்டின் பொருள்

பரிசுத்தமான இரத்தினங்கள் இழைக்கப்பட்ட மாடியிலே, சுற்றிலும் விளக்குக்கள் எரியவும், அகில், சந்தனம் முதலியவற்றின் புகை மணக்கவும், தூங்குவதற்கென்றே அமைக்கப் பெற்ற படுக்கையின்மீது கண் உறங்குகின்ற அம்மான் பெண்ணே! மாணிக்கம் பதித்த கதவின் தாளைத் திற.

இவ்வளவு அருமையாக மாமன் மகளை எழுப்பியும் அத்தூங்குமூஞ்சி எழுந்திருக்கவில்லை. பக்கத்தில் அவள் அன்னை—வந்தவர்களின் மாமி படுத்திருப்பாள் என்பது தெரியும்.

மாமியாரே! தங்கள் மகள் எங்கட்குப் பதிலே சொல்லாததால் ஊமையா? அல்லது, நாங்கள் அழைப்பது காதில் ஏறாத செவிடா? உண்மையிலேயே உறக்கந்தானா? ஒருகால் நீங்கள் ஏதும் பாதுகாப்புச் செய்து விட்டீர்களா? அன்றி, பெரிய தூக்கமாகிய மந்திரத்தில் கட்டுப்பட்டு விட்டாளா? எப்படியிருந்தாலும் சரி.

மாமாயன், மாதவன், வைகுந்தன் என்று என்று, அவனுடைய ஆயிரம் பெயரையும் சொல்லி, அவனை எழுப்ப மாட்டீர்களா?

## திருப்பாவை—கഠ

நோற்றுச் சுவர்க்கம்
புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ,
வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய்முடி
நாரா யணன்,நம்மால்
போற்றப் பறைதரும்
புண்ணியனால், பண்டுஒருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த
கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே
பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்தல்
உடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து
திறவேல்,ஓர் எம்பாவாய்!

## ௧௦-ஆவது பாட்டின் பொருள்

**ஒரு நங்கை; தவசிபோல் காணப்படு-வாள்; விரதமெல்லாம் அநுட்டிப்பாள்; சுவர்க்கத்தை எட்டிப் பிடிப்பவள் போல் பேசுவாள்; அத்தகையவள் விடிந்த பிறகும் நன்ருகத் தூங்குகின்ருள்; அவள் வீட்டு வாசலில் நின்று பேசுகின்றனர் ஒரு கூட்டத்தார்.**

நோன்பு இருந்து சுவர்க்கம் செல்லுகின்ற தாயே! நீ வாசல் கதவைத்தான் திறக்கவில்லை என்ருல், உள்ளே இருந்தபடியே ஒரு வார்த்தை-யாவது பேசக் கூடாதோ?

மணக்கின்ற துளசி மாலையை முடியிற் சூடிய நாராயணனுகிய, நாம் போற்ற, நமது விருப்பத்தை முடிந்து வைக்கின்றவனுகிய, "நவையறு குணங்கள் என்னும் பூண்எலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி" யாம் இராமபிரானல், முன்னெரு காலத்தில் எமன்

(தொடர்ச்சி 73-ஆம் பக்கம்)

## கக-ஆவது பாட்டின் பொருள்

கன்றுக் குட்டிகளையுடைய பசுக்கூட்டங்கள் பலவற்றைப் பால் கறந்து, பகைவரது வலிமை தொலைய, அவர்கள் இருக்கும் இடம் தேடிச் சென்று, போர் செய்ய வல்ல, குற்றம் எதுவும் இல்லாத இடையர்களது தங்கக் கொடி போன்ற நங்கையே!

புற்றில் வாழ் அரவு போன்ற அல்குலை-யுடைய, புனத்தில் திரியும் மயிலனையவளே! எழுந்துவா; உனக்கு உறவினராகிய தோழிமார் அனைவரும் வந்து, நின் வாசலிலே புகுந்து,

(தொடர்ச்சி 74 ஆம் பக்கம்)

---

## கo-ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி

வாயிலே தள்ளப்பட்ட கும்பகருணன் என்பவன், உன்னிடத்திலே உறக்கப் போட்டியில் தோல்வி-யடைந்து, அவனுடைய பெருந் தூக்கத்தை உனக்குத் தந்து விட்டுப் போனானோ?

நல்ல தூக்கம் தூங்குகின்றாய்; எங்கட்-கெல்லாம் அருமையான ஆபரணமாக அமைந்-திருப்பவளே! தெளிந்து எழுந்து வந்து கதவைத் திற, அம்மா!

**கக-ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி**

நீலமேனி நெடுமாலின் பெயரைப் பாட, செல்வப் பெண்டாட்டியாகிய நீ, அசையாமல், மூச்சு விடாமல் எதற்காக இப்படி உறங்குகின்றாய்? இதன் பொருள்தான் என்ன?

கற்று, கன்று என்பதன் விகாரம்.

கறவை : பசு.

கணம் : கூட்டம்.

கன்றையுடைய பசுக் கூட்டங்களைக் கறந்தார்கள் என்றமையால், கன்றைப் பறி கொடுத்த பசுக்களைக் கறக்கவில்லை என்பது கிடைக்கின்றது. ஒவ்வொருவரும் பல பசுக் கூட்டங்களை உடையவராக இருந்தனர் என்று தெரிகின்றது. "பல் ஆன் கோவலர் இல்லம்" என்று சிலப்பதிகார ஆசிரியர் கூறுவது இங்குப் பொருந்துவது.

ஆயர்கள் பசுவும் கறப்பார், போரும் வல்லார் என்பது சிறப்பான அமைப்பு.

## திருப்பாவை—கக

கற்றுக் கறவைக்
  கணங்கள் பலகறந்து,
செற்ருர் திறல்அழியச்
  சென்று செருச்செய்யும்
குற்றம்ஒன்று இல்லாத
  கோவலர்தம் பொற்கொடியே !
புற்றுஅரவு அல்குல்
  புனமயிலே ! போதராய்.
சுற்றத்துத் தோழிமார்
  எல்லாரும் வந்து,நின்
முற்றம் புகுந்து
  முகில்வண்ணன் பேர்பாட,
சிற்ருதே பேசாதே
  செல்வப்பெண் டாட்டி,நீ
எற்றுக்கு உறங்கும்
  பொருள்ஏல்,ஓர் எம்பாவாய் !

## கஉ-ஆவது பாட்டின் பொருள்

**இப்பாவில் எருமையின் வளம் இயம்பப்படுகிறது.**

**ஒரு செல்வச் சீமானின் தங்கை உறங்குகின்ருள்; அவளைப் பார்த்துக் கூறுகின்றனர்.**

இளம் கன்றுடைய எருமையானது, கனைத்துக்கொண்டு, தம் கன்றுக்காக இரக்கமுற்று, கன்றை நினைத்து, முலைகளின் வழியே இடைவிடாமல் பால் பெருக, நனைத்து, வீடு முழுதும் சகதியாக்குகின்ற நல்ல செல்வனுடைய தங்கையே!

பனியானது எங்கள் தலையிலே விழ, உன்னுடைய கடை வாசலில் வந்து நின்று, கோபங்கொண்டு தென்னிலங்கை மன்னனுகிய இராவணனைத் தொலைத்த, நம் மனத்திற்கினியவனுன ரகுராமனை, நாங்கள் பாடுகின்ரேம்; நீ திறக்க மாட்டேன் என்கிருய்; இனியாவது எழுவாயாக! என்ன உறக்கம் இது? எல்லா வீட்டாரும் எழுந்துவிட்டனரே!

## திருப்பாவை—கஉ

கனைத்துஇளம் கற்றுஎருமை
  கன்றுக்கு இரங்கி,
நினைத்து முலைவழியே
  நின்றுபால் சோர
நனைத்து,இல்லம் சேறுஆக்கும்
  நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழ,நின்
  வாசல்கடை பற்றி,
சினத்தினால் தென்இலங்கைக்
  கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப்
  பாடத் திறவாய்;
இனித்தான் எழுந்திராய்;
  ஈதென் உறக்கம்?
அனைத்தில்லத் தாரும்
  அறிந்தேல்,ஓர் எம்பாவாய்!

## கஙு-ஆவது பாட்டின் பொருள்

பகாசுரனுடைய வாயைக் கிழித்தவனை, பொல்லாத இராவணனுடைய தலைகள் பத்தையும் கிள்ளியெறிந்து தொலைத்தவனை, புகழ்ந்து பாடிக் கொண்டு பிள்ளைகள் எல்லோரும், பாவை நோற்கும் இடத்தை அடைந்துவிட்டார்கள்; விடிவதை உணர்த்தும் வெள்ளிமீன் தோன்றிவிட்டது; வியாழமும் சென்றுவிட்டது; பறவைகள் ஓலமிடுகின்றன; மலர்போன்ற ரேகை பொருந்திய விழிகளைப் பெற்றவளே! பதுமை போன்றவளே! நல்ல நாளாகிய இன்று கபடத்தை விட்டு எங்களோடு சேர்ந்து, நன்றாகக் குளிருமாறு குடைந்து நீராடாமல், படுக்கையிலே கிடக்கின்றாயா? எழுந்திரு.

"புள்ளும் சிலம்பினகாண்" என்ற இதே சொல்-தொடர், திருப்பாவை சுா-ஆம் பாட்டிலும் அப்படியே இருக்கின்றது.

## திருப்பாவை—கரு

புள்ளின்வாய் கீண்டானைப்
 பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக்
 கீர்த்திமை பாடிப்போய்,
பிள்ளைகள் எல்லாரும்
 பாவைக் களம்புக்கார் ;
வெள்ளி எழுந்து
 வியாழம் உறங்கிற்று ;
புள்ளும் சிலம்பினகாண் ;
 போதுஅரிக் கண்ணினய் !
குள்ளக் குளிரக்
 குடைந்துநீர் ஆடாதே,
பள்ளிக் கிடத்தியோ,
 பாவாய்!நீ, நல்நாளால் ;
கள்ளம் தவிர்ந்து
 கலந்தேல்,ஓர் எம்பாவாய் !

## கசு-ஆவது பாட்டின் பொருள்

உங்களுடைய வீட்டின் பின்பக்கம் உள்ள தோட்டத்தில் இருக்கிற குளத்திலே செங்கழு-நீர்ப் பூக்கள் மலர்ந்துவிட்டன; அல்லி மலர்கள் இதழ் மூடிவிட்டன; காவியாடை தரித்த வெள்ளிய பற்களையுடைய துறவிகள், தங்கட்கு உரிமையுடைய கோயில்களிலே விடிவதை உணர்த்தும் சங்கை ஊதுவதற்கு வந்துவிட்டார்-கள்.

எங்களை முன்னமே எழுப்புவதாக வாய்ப் பேச்சுப் பேசிய பெண்ணே! எழுந்திரு; உனக்கு வெட்கமில்லையா? நாக்குத்தான் இருக்கிறது.

சங்கு சக்கரத்தைத் தாங்கிய விசாலமான கைகளையுடைய எம்பெருமானை — தாமரை போன்ற மலர்ந்த கருணைக் கண் உடையானைப் பாடு.

இப் பாடல் "மானே நீ நென்னலை" என்ற சு-ஆவது திருவெம்பாவையோடு ஒப்பது.

உங்கள் புழைக்கடைத்
தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து
ஆம்பல்வாய் கூம்பினகாண் ;
செங்கல் பொடிக்கூறை
வெண்பல் தவத்தவர்,
தங்கள் திருக்கோயில்
சங்குஇடுவான் போதந்தார் ;
எங்களை முன்னம்
எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் ! எழுந்திராய்,
நாணாதாய், நாஉடையாய்,
சங்கொடு சக்கரம்
ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணனைப்
பாடேல்,ஓர் எம்பாவாய் !

கரு—ஆவது பாட்டின் பொருள்

உறங்குபவளுக்கும் எழுப்புபவர்கட்கும் தர்க்கம்.

**எழுப்புபவர் :** இந்தா ! சின்னக் கிளியே' இன்னமா தூங்குகின்றாய் ?

**உறங்குபவள் :** "சில்" என்று சத்தம் போட்டுக் கூப்பிட வேண்டாம் ; அம்மாக்களா ! வந்து விடுகின்றேன்.

**எழுப்புபவர் :** நீ ரெம்பக் கெட்டிக்காரி ; உன் பேச்சு முன்னமே எங்கட்குத் தெரியாதா ? உன்வாயை நாங்கள் அறிவோம்.

**உறங்குபவள் :** நீங்கள் சாமர்த்தியம் வாய்ந்தவர்களானலும் சரி, நாளுக இருந்தாலும் சரி.

**வந்தவர்கள் :** விரைந்து எழுந்து வா ; நீ மட்டும் என்ன எங்களை விட உயர்ந்தவள் ? நாங்கள் நிற்பது, நீ தூங்குவதா ?

(தொடர்ச்சி 84—ஆம் பக்கம்)

## திருப்பாவை—கரு

எல்லே ! இளம்கிளியே !
இன்னம் உறங்குதியோ ?
"சில்"என்று அழையேன்மின்,
நங்கைமீர் ! போதர்கின்றேன் ;
வல்லை,உன் கட்டுரைகள்
பண்டேஉன் வாய்அறிதும் ;
வல்லீர்கள் நீங்களே,
நானேதான் ஆயிடுக ;
ஒல்லைநீ போதாய்,
உனக்கென்ன வேறுஉடையை ;
" எல்லாரும் போந்தாரோ ? "
"போந்தார்,போந்து எண்ணிக்கொள்"
வல்ஆனை கொன்றானை;
மாற்றாரை மாற்றுஅழிக்க
வல்லானை மாயனைப்
பாடேல்,ஓர் எம்பாவாய் !

**கரு-ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி**

**வீட்டுக்காரி :** வர வேண்டியவர் எல்லாரும் வந்து விட்டார்களா ?

**வந்த கூட்டத்தார் :** ஆம், வந்து விட்டார்கள் ; வந்து எண்ணிப்பார். குவலயாபீடம் என்னும் வலிய யானையைக் கொன்றவனை, மாறுபட்டவரின் பெருமையைத் தொலைக்கும் வலியுடையானை, மாயனைப் பாடு.

"ஒள் நித்தில நகையாய்" என்னும் நான்காம் திருவெம்பாவையுடன் இத் திருப்பாவை பெரிதும் பொருந்துவது.

நாயக னாய்நின்ற
நந்தகோ பன்உடைய
கோயில்காப் பானே!
கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே!
மணிக்கதவம் தாள்திறவாய்;
ஆயர் சிறுமிய
ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன்
நென்னலே வாய்நேர்ந்தான்;
தூயோமாய் வந்தோம்,
துயில்எழப் பாடுவான்;
வாயால்முன் னம்முன்னம்
மாற்றாதே, அம்மா,நீ
நேய நிலைக்கதவம்
நீக்கேல்,ஓர் எம்பாவாய்!

## கசு—ஆவது பாட்டின் பொருள்

**கூடவேண்டிய அனைவரும் சேர்ந்து விட்டனர். இடையர் சிறுமியர் எல்லோரும் ஒன்றாக நந்தகோபன் மாளிகையை நோக்கிச் செல்கின்றனர். அங்கும் கதவு தாளிடப் பட்டிருக்கிறது. காவலாளிகளை நோக்கிக் கூறுகின்றனர்.**

தலைவனாய் இருக்கின்ற நந்தகோபனுடைய அரண்மனையைக் காவல் புரிகின்றவனே! கொடிக் கட்டிய தோரண வாசலைக் காப்பவனே! இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற கதவின் தாளைத் திறப்பாயாக! இடையர் சிறுமியராகிய எங்கட்கு, அலறுகின்ற பறை வாத்தியத்தை அளிப்பதாக மாயனாகிய மணிவண்ணன் நேற்றே திருவாய் மலர்ந்தருளினான்.

புனிதமாக நாங்கள் அவனுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாட வந்திருக்கிறோம். உன் வாயினாலே முதல் முதலில் மறுத்துச் சொல்லி விடாமல், ஐயனே! நீ, ஒன்றோடொன்று நேசமாக இணைந்திருக்கும் தன்மை கொண்ட கதவை நீக்குக.

அம்பரமே, தண்ணீரே,
சோறே, அறம் செய்யும்
எம்பெருமான்! நந்தகோ
பாலா! எழுந்திராய் ;
கொம்பனார்க்கு எல்லாம்
கொழுந்தே ! குலவிளக்கே !
எம்பெரு மாட்டி !
யசோதாய் ! அறிவுறாய் ;
அம்பரம் ஊடு அறுத்து
ஓங்கிஉலகு அளந்த
உம்பர்கோ மானே !
உறங்காது, எழுந்திராய் ;
செம்பொற் கழல்அடிச்
செல்வா ! பலதேவா !
உம்பியும் நீயும்
உறங்கேல்,ஓர் எம்பாவாய் !

## கஎ—ஆவது பாட்டின் பொருள்

**கதவு திறக்கப்பட்டது. உள்ளே சென்று விட்டனர் சிறுமியர்; அங்கு உறங்குகின்றவர்களை எழுப்புகின்றனர்.**

ஆடை, நீர், சோறு ஆகிய மூன்றையும் வேண்டுமளவு ஈந்து உவக்கும் எம்பெருமானாகிய நந்தகோபாலா! எழுந்திருப்பாயாக.

கொம்பனைய நங்கையர்க் கெல்லாம் கொழுந்தாக இருப்பவளே! குலத்துக்கு விளக்கே! எங்கள் பெருமாட்டி! யசோதையம்மா! துயில் எழுவாயாக!

வானை ஊடுருவிப் பிளந்து, நிமிர்ந்து உலகத்தை அளந்த, தேவாதி தேவனே! உறங்காதே, எழுந்திரு.

செவ்விய தங்கத்தாற் செய்யப்பட்ட வீர கண்டாமணியை அணிந்த திருவடியை யுடைய செல்வனே! பலராமா! உன் தம்பியாகிய கண்ணபிரானும் நீயும் உறங்காதீர்கள்.

## திருப்பாவை—கஅ

உந்து மதகளிற்றன்,
ஓடாத தோள்வலியன்,
நந்தகோ பாலன்
மருமகளே! நப்பின்னாய் !
கந்தம் கமழும்
குழலீ ! கடைதிறவாய் ;
வந்துஎங்கும் கோழி
அழைத்தனகாண் ; மாதவிப்
பந்தல்மேல் பல்கால்
குயில்இனங்கள் கூவினகாண் ;
பந்தார் விரலி!உன்
மைத்துனன் பேர்பாட,
செந்தா மரைக்கையால்
சீரார் வளைஒலிப்ப
வந்து திறவாய்,
மகிழ்ந்தேல்,ஓர் எம்பாவாய் !

## கஅ-ஆவது பாட்டின் பொருள்

**நந்தன் அரண்மனையுள்ளே அந்தப்புரத்திலே புகுந்துவிட்டனர், ஆயர் சிறுமியர் ; கதவைத் தட்டுகின்றனர்.**

**இனி வரும் பாடல்களில் கண்ணனும் அவன் காதலி நப்பின்னைப் பிராட்டியும் துயில் எழுப்பப் பெறுகின்றனர்.**

மதத்தைப் பொழிகின்ற யானைகளை யுடையவன், எவர்க்கும் தோற்காத தோள் ஆற்றல் பெற்றவன் ஆகிய, நந்தகோபாலனுடைய மருகியாகிய நப்பின்னை நங்காய் ! மணம் வீசுகின்ற கூந்தலை உடையவளே ! கதவைத் திற. கோழிகள் எங்கும் வந்து கூவுகின்றன ; மாதவிக் கொடிகள் படர்ந்த பந்தலின் மீது குயில் கூட்டங்கள் பன்முறையும் இனிய ஓசையை எழுப்புகின்றன.

பந்து பயில்கின்ற விரல்களை யுடையவளே ! உன் கணவன் பெயரை நாங்கள் பாட, செந்தாமரை போன்ற உன் கைகளால் சிறந்த வளையல்கள் குலுங்க நீ வந்து மகிழ்ந்து கதவைத் திறப்பாயாக.

இங்கு, "பந்தார் விரலி" என்றபடி "பந்தணை விரலாள்" என்று திருவாசகம் கூறும்.

## திருப்பாவை—கசூ

குத்து விளக்குஎரியக்
கோட்டுக்கால் கட்டில்மேல்
"மெத்" என்ற பஞ்ச
சயனத்தின் மேல்ஏறி,
கொத்தலர் பூங்குழல்
நப்பின்னை கொங்கை,மேல்
வைத்துக் கிடந்த
மலர்மார்பா ! வாய்திறவாய் ;
மைத்தடம் கண்ணினாய் !
நீஉன் மணாளனை,
எத்தனை போதும்
துயில்எழ ஒட்டாய்காண் !
எத்தனை ஏலும்
பிரிவுஆற்ற கில்லாயால் ;
தத்துவம் அன்று,
தகவேல்,ஓர் எம்பாவாய் !

## கசு—ஆவது பாட்டின் பொருள்

**கண்ணன் கோலாகலமாக ஆனந்த இன்பத் துயில் கொள்கின்ருன். அவன் காதுகளில் விழுகின்றது சிறுமிகள் பேச்சு.**

குத்துவிளக்கு எரிந்துகொண் டிருக்கிறது; யானைத் தந்தத்தில் வேலைப்பாடு அமைத்த கால்களையுடைய கட்டிலின் மேல், "மெத்" என்று இருக்கும் பஞ்ச சயனம் அலங்காரமாக விளங்கித் தோன்றுகிறது.

அம்மெத்தையின் மேல் ஏறி, கொத்துக் கொத்தாக மலர்ந்திருக்கின்ற பூ முடித்த கூந்தலையுடைய பின்னைப் பிராட்டியின் கொங்கைகளை, மேலே வைத்துக் கிடக்கின்ற மலர் மார்புடைய கண்ணபிரானே ! வாயைத் திறப்பாயாக.

மை திட்டிய பெருங்கண்ணைப் பெற்ற நப்பின்னய்! நீ உன் நாயகனைக் கொஞ்ச நேரங் கூடத் துயில் எழ விடமாட்டாய் போல்

இருக்கிறதே; சிறிதேனும் அவனைப் பிரிந்து ஆற்ற மாட்டாய் போலும்! இது இயல்பான அமைப்பு அன்று; தகுதியு மாகாது.

கோடு: யானைத் தந்தம். "மெத்" என்று இருப்பதாலேயே "மெத்தை" என்ற பெயர் பெற்றது. பஞ்ச சயனம் என்பது ஐந்து விதமான தன்மை கொண்ட படுக்கை. அவ் ஐந்து தன்மைகள் வருமாறு: க. அழகு; உ. குளிர்ச்சி; ங. மென்மை; ச. வெண்மை; ரு. மணம்.

## உ0–ஆவது பாட்டின் பொருள்

முப்பத்து மூன்று அமரர் தலைவர்க்கும் முன்னே போய் அவர்கள் நடுக்கத்தைப் போக்கும் வலிபடைத்தவனே! படுக்கையை விட்டு எழு.

ஒழுங்கு உடையவனே! ஆற்றல் வாய்ந்தவனே! பகைவர்க்குச் சூடு தரும் மேலானவனே! உறக்கத்தினின்றும் எழு.

செப்புப் போன்ற மெல்லிய கொங்கைகளையும், சிவந்த வாயையும், சிறிய இடையையும் கொண்ட நப்பின்னைப் பிராட்டியே! திருமகளே! நித்திரை தெளிந்து எழு.

ஆலவட்டமும் கண்ணடியும் தந்து உன் மணவாளனையும் எம்மையும் இப்போதே நீராட்டு.

கப்பம்: நடுக்கம்: கம்பம் என்ற சொல்லின் வலித்தல். கலி: வல்லமை. உக்கம்: ஆலவட்டம். தட்டொளி: கண்ணடி.

(தொடர்ச்சி 96-ஆம் பக்கம்)

## திருப்பாவை—உ௦

முப்பத்து மூவர்
அமரர்க்கு முன்சென்று,
கப்பம் தவிர்க்கும்
கலியே! துயில்எழாய்;
செப்பம் உடையாய்!
திறல்உடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும்
விமலா! துயில்எழாய்;
செப்பன்ன மென்முலைச்
செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்!
திருவே! துயில் எழாய்;
உக்கமும் தட்டொளியும்
தந்துஉன் மணாளனை,
இப்போதே எம்மை நீர்
ஆட்டேல்,ஓர் எம்பாவாய்!

## உ०—ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி

முப்பத்து முக்கோடி தேவர்க்கும், கோடிக்கு ஒருவர் வீதம் முப்பத்து மூன்று பேர் தலைவர். இங்கே அத்தலைவர்களே "முப்பத்து மூவர் அமரர்" என்று கூறப்படுவதாகக் கொள்ள வேண்டும். "மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த தேவரும்" என்ற திருவாசகம் இதனை வலியுறுத்தும். முப்பத்து மூன்று தலைவ-ராவார், பதினொரு உருத்திரர், பன்னிரு சூரியர், எட்டு வசுக்கள், இரண்டு அசுவினி தேவர் என்ப.

## திருப்பாவை—உக

ஏற்ற கலங்கள்
எதிர்பொங்கி மீதுஅளிப்ப
மாற்ருதே பால்சொரியும்
வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான்
மகனே! அறிவுருய்;
ஊற்றம் உடையாய்!
பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற
சுடரே! துயில்எழாய்;
மாற்ருர், உனக்கு
வலிதொலைந்துஉன் வாசற்கண்
ஆற்ருது வந்துஉன்
அடிபணியு மாபோலே
போற்றியாம் வந்தோம்
புகழ்ந்தேல்,ஓர் எம்பாவாய்!

## உக—ஆவது பாட்டின் பொருள்

பால் கறக்க எடுத்துக் கொண்ட பாத்திரங்-களெல்லாம் நிறைந்து எதிர்த்துப் பொங்கி மேலே வழியும்படியாக, இடைவிடாமல் பாலைப் பொழி-கின்ற கொடைக்குணம் கொண்ட பெரிய பசு மாடுகளை ஏராளமாக உடைய நந்தகோபனுடைய மைந்தனே ! துயில் உணர்வாயாக. திண்மை வாய்ந்தவனே ! பெருமை பெற்றவனே ! உலகத்-தார் கண்கட்குப் புலனும்படி நின்ற விளக்குப் போன்றவனே ! தூக்கத்தை விடு. பகைஞர் உனக்குத் தோற்று எய்த்துப்போய், உன் வீட்டு வாசலிலே வந்து உன் அடிகளை வணங்குவது போல, உன்னைப் புகழ்ந்து போற்றி நாங்கள் வந்திருக்கின்றோம்.

"தோற்றச் சுடர் அனையாய் !" என்ற திருவாசகச் சிவ புராணம், "தோற்றமாய் நின்ற சுடரே !" என்பதோடு ஒக்கும்.

## திருப்பாவை—உஉ

அங்கண்மா ஞாலத்து
அரசர், அபிமான
பங்கமாய் வந்து,நின்
பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல்
வந்து தலைப்பெய்தோம்;
கிங்கிணி வாய்ச்செய்த
தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே
எம்மேல் விழியாவோ ?
திங்களும் ஆதித்
தியனும் எழுந்தாற்போல்,
அங்கண் இரண்டுங்கொண்டு
எங்கள்மேல் நோக்குதியேல்,
எங்கள்மேல் சாபம்
இழிந்தேல்,ஓர் எம்பாவாய் !

## உஉ-ஆவது பாட்டின் பொருள்

அழகிய பெரிய உலகத்திலேயுள்ள மன்னரெல்லாம் தங்களின் மேம்பட்டாரிலர் என்ற அபிமானத்தைக் கைவிட்டு வந்து, உன்னுடைய சிங்காதனத்தின் அடியிலே கூட்டமாக இருப்பது போல, நாங்கள் வந்து கூடியிருக்கின்றோம்.

சதங்கையிலுள்ள சிறு மணிகளால் செய்யப்பட்ட, தாமரைப் பூப்போன்ற சிவந்த கண்களைச் சிறுகச் சிறுக எங்கள் மீது பரப்ப மாட்டாயா ?

சந்திரனும் சூரியனும் உதித்தது போல கருணைக் கண்கள் இரண்டையும் கொண்டு, எங்கட்கு ஏற்பட்ட துக்கத்தைப் போக்க எங்கள் மீது கடைக்கண் பார்வையைச் செலுத்துவாயாக.

## திருப்பாவை—உரு

மாரி மலைமுழைஞ்சில்
மன்னிக் கிடந்துஉறங்கும்
சீரிய சிங்கம்,
அறிவுற்றுத் தீவிழித்து,
வேரி மயிர்பொங்க
எப்பாடும் பேர்ந்துஉதறி,
மூரி நிமிர்ந்து,
முழங்கிப் புறப்பட்டு,
போதருமா போலேநீ,
பூவைப்பூ வண்ணா!உன்
கோயில்நின்று இங்ஙனே
போந்தருளி, கோப்புடைய
சீரிய சிங்கா
சனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்து
அருளேல்,ஓர் எம்பாவாய் !

## உ௫-ஆவது பாட்டின் பொருள்

# சிங்கப் பாட்டு

காயாம் பூப்போன்ற திருமேனி உடையவனே! மழைக்காலத்திலே, மலைக் குகையிலே பொருந்திக் கிடந்து, தூங்குகின்ற சிறந்த சிங்கமானது, உணர்ச்சியடைந்து, அனல் பறக்கக் கண் திறந்து, பிடரி மயிர் சிலிர்க்கும்படி எல்லாப் பக்கமும் திரும்பி உதறி, சோம்பல் முறித்து, கர்ச்சித்துப் பாய்ந்து வருவது போல, நீ உன் கோவிலினின்றும் இங்கு எழுந்தருளி, அலங்கரிக்கப் பெற்ற பெருமை மிக்க அரியாசனத்தமர்ந்து, நாங்கள் வந்த வேலையைக் கேட்டு ஆராய்ந்து எங்கட்கு அருள்புரிய வேண்டும்.

பூவைப் பூ, காயா்ம் பூ. அப்பூவின் நிறம் நீலம். பூவை என்று நாகணவாய்ப்புள் (மைனா) என்ற ஒரு பறவைக்கும் பெயர் உண்டு. இரண்டு பூவைக்கும் உள்ள வேறு பாட்டைப் பிரித்துக் காட்ட, சிறந்த நூலாகிய அழகர் கலம்பகம் இயற்றிய ஆசிரியர் காயாம் பூவைச்

**உரு-ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி**

சொல்லும் போது, "மணம் கமழ் பூவை" என்பார். வாசனை வீசுகின்ற பூவை எனவே, அப் பூவை பறவையல்ல, காயாம் பூவே என ஏற்படுகிறது. சங்க இலக்கியமாகிய பரிபாடலில் காயாவைக் குறிக்குங்கால் "பறவாப் பூவை" எனக் கூறப்படுகிறது. பறக்கும் பூவை நாகணவாய்ப்புள். இங்குப் "பூவைப் பூ" எனக் காயாம் பூவே உணர்த்தப்பட்டது.

## உச-ஆவது பாட்டின் பொருள்

# போற்றிப் பாட்டு

அந்த நாளில் இந்த உலகத்தை அளந்தவனே! உன் திருவடிகட்கு வணக்கம்.

தெற்கேயுள்ள இலங்கைக்குச் சென்று அங்குள்ள அரக்கர்களைத் தொலைத்தவனே! உன் வலிமைக்கு வணக்கம்.

சகடாசுரன் அழிந்து விழ உதைத்தவனே! உன் புகழுக்கு வணக்கம்.

கன்றுக் குட்டியாக வந்த ஓர் அசுரனைக் குறுந்தடியாகக் கொண்டு, விளாமரமாக நின்ற ஓர் அசுரன் மீது தூக்கி எறிந்து, இரண்டு அசுரர்களையும் முடித்தவனே! உன் பொன்னடிகட்கு வணக்கம்.

கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாகத் தூக்கி மழையைத் தடுத்து மக்களைக் காத்தவனே! உன் நல்ல குணத்துக்கு வணக்கம்.

வெற்றி கொண்டு பகையைத் தொலைக்கும் உன் கையில் பொருந்திய வேலுக்கு வணக்கம்.

இவ்வாறாக உன் வீரச் செயல்களைப் புகழ்ந்து எங்கள் விருப்பத்தைப் பெற இன்று நாங்கள் வந்திருக்கின்றோம்; எங்கட்கு அருள் புரிவாயாக.

## திருப்பாவை—உச

அன்றுஇவ் உலகம்
அளந்தாய்! அடிபோற்றி ;
சென்றுஅங்குத் தென்இலங்கை
செற்ருய்! திறல்போற்றி ;
பொன்றச் சகடம்
உதைத்தாய்! புகழ்போற்றி ;
கன்று குணிலா
எறிந்தாய்! கழல்போற்றி ;
குன்று குடையா
எடுத்தாய்! குணம்போற்றி ;
வென்று பகைகெடுக்கும்
நின்கையில் வேல்போற்றி ;
என்றென்றுன் சேவகமே
ஏத்திப் பறைகொள்வான்,
இன்றுயாம் வந்தோம் ;
இரங்கேல்,ஓர் எம்பாவாய் !

## ௨௫-ஆவது பாட்டின் பொருள்

தேவகியென்னும் ஒருத்திக்கு மகனைகப் பிறந்து, ஓர் இரவிலேயே யசோதை என்னும் ஒருத்திக்கு மகனைகி மறைந்து வளர, இதனை அறிந்ததும் பொறுனைகி, தனக்குக் கேடு நினைத்த கஞ்சனது எண்ணத்தை அழித்து, அவன் வயிற்றில் திப்பிடித்து எரியும்படி நின்ற நீண்ட-மாலே! உன்னை விரும்பி வந்தோம்; நாங்கள் விரும்பியதைத் தருவாயானல், உனது பெருஞ் செல்வத்தையும் வீரத்தையும் பாடி, துயரமும் நீங்கி மகிழ்ந்திருப்போம்.

## திருப்பாவை—உரு

ஒருத்தி மகனாய்ப்
பிறந்துஓர் இரவில்
ஒருத்தி மகனாய்
ஒளித்து வளர
தரிக்கிலான் ஆகித்தான்
தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக்
கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற
நெடுமாலே! உன்னை,
அருத்தித்து வந்தோம்;
பறைதருதி ஆகில்,
திருத்தக்க செல்வமும்
சேவகமும் பாடி,
வருத்தமும் தீர்ந்து
மகிழ்ந்தேல்,ஓர் எம்பாவாய்!

## உசா-ஆவது பாட்டின் பொருள்

திருமாலே! நிலமணி போன்ற நிறமுடையவனே! மார்கழி நீராடும் பொருட்டு முன்னோர்கள் செய்த காரியங்களில் வேண்டியவற்றைக் கேட்பாயாகில், (சொல்லுவோம்) உலகத்தையெல்லாம் நடுங்கச் செய்யுமாறு ஒலிக்கின்ற பால் போன்ற நிறமுடைய உனது பாஞ்ச சன்னியத்தை ஒத்த சங்குகளும், தொலைவிலும் போய், செவியிற் படுதலையுடையனவாகிய மிகப் பெரிய பறை வாத்தியங்களும், பல்லாண்டு பாடுபவர்களும், அழகிய விளக்குக்களும், கொடிகளும், மேற்கட்டிகளும் (வேண்டும்).

ஆலின் இலைமேல் பள்ளி கொண்ட. கண்ணபிரானே! இவற்றை எங்கட்கு அருள்வாயாக!

மாலே ! மணிவண்ணா !
மார்கழிநீர் ஆடுவான்,
மேலையார் செய்வனகள்
வேண்டுவன கேட்டியேல்,
ஞாலத்தை எல்லாம்
நடுங்க முரல்வன,
பாலன்ன வண்ணத்துஉன்
பாஞ்ச சனியமே,
போல்வன சங்கங்கள்,
போய்ப்பாடு உடையனவே,
சாலப் பெரும்பறையே,
பல்லாண்டு இசைப்பாரே,
கோல விளக்கே,
கொடியே, விதானமே,
ஆலின் இலையாய் !
அருளேல்,ஓர் எம்பாவாய் !

உஎ-ஆவது பாட்டின் பொருள்

## சர்க்கரைப் பொங்கல் பாட்டு

எதிரிகளை வெற்றி கொள்ளும் சிறப்புடைய கோவிந்தா! உன்னைப் பாடி, பறையைப் பெற்று, நாங்கள் அடைகின்ற பரிசில் எது?

நாடு புகழும் தகுதியுடைய வளையல், வங்கி, காதுத்தோடு, காதுப்பூ, சிலம்பு என்பன வாதி பலவகை நகைகளையும் நாங்கள் நன்கு பூட்டிக் கொள்வோம்; நல்ல உடை உடுத்திக் கொள்-வோம்; அதன் பிறகு பாலில் வேகவைத்த சோறு முழுதும் மறையுமாறு நெய்யைக் கொட்டி, சோற்றைக் கையில் எடுக்கும் பொழுது முழங்கை வழியாக அந்நெய்யானது ஒழுகும் படியாக, எல்லோரும் கூடியிருந்து உண்டு களித்திருப்போம்.

"யாம் பெறும் சம்மானம்" இவையே என்பது கருத்து.

(தொடர்ச்சி 112-ஆம் பக்கம்)

கூடாரை வெல்லும்சீர்க்
   கோவிந்தா ! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு
   யாம்பெறு சம்மானம் ;
நாடு புகழும்
   பரிசினுல் நன்ருகச்
சூடகமே, தோள்வளையே,
   தோடே, செவிப்பூவே,
பாடகமே, என்றுஅனைய
   பல்கலனும் யாம்அணிவோம் ;
ஆடை உடுப்போம் ;
   அதன்பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து,
   முழங்கை வழிவார,
கூடி இருந்து
   குளிர்ந்தேல்,ஓர் எம்பாவாய் !

**உஎ—ஆவது பாட்டின் பொருள்-தொடர்ச்சி**

இப்பாட்டு, திருப்பாவையின் இருபத்தேழாவது பாடலாததால், மார்கழி மாதங்களில் இருபத்தேழாம் நாள் திருப்பள்ளி எழுச்சிக் காலத்தில் பெருமாள் கோவில்களில் திவ்யமான அக்கார அடிசில் செய்வதை இன்றும் காணலாம். அன்று செய்யும் சாதத்துக்கு, "கூடாரை வெல்லும் சீர்ச் சர்க்கரைப் பொங்கல்" என்பது பெயர்.

## திருப்பாவை—உஅ

கறவைகள் பின்சென்று
  கானம்சேர்ந்து உண்போம் ;
அறிவொன்றும் இல்லாத
  ஆய்க்குலத்துஉன் தன்னைப்
பிறவி பெறும்புண்
  ணியம்யாம் உடையோம் ;
குறைவுஒன்றும் இல்லாத
  கோவிந்தா! உன்னோடு
உறவேல் நமக்குஇங்கு
  ஒழிக்க ஒழியாது ;
அறியாத பிள்ளைகளோம்,
  அன்பினால்உன் தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும்
  சீறிஅரு ளாதே
இறைவா!நீ தாராய்,
  பறையேல்,ஓர் எம்பாவாய் !

### உஅ-ஆவது பாட்டின் பொருள்

பசுக்களுக்குப் பின்னே போய், காட்டை அடைந்து, அங்கே சாப்பிடுவோம்.

அறிவு சிறிதும் இல்லாத இடையர் குலத்திலே, உன்னைப் பிள்ளையாகப் பெறத்தக்க புண்ணியத்தை நாங்கள் உடைத்தாயிருக்கின்றோம்,

ஒரு குறையும் இல்லாத கோவிந்தா! உனக்கும் எங்கட்கும் உள்ள தொடர்பு ஒழிக்க முடியாதது.

நாங்கள் அறியாப் பிள்ளைகள்; அன்பு கொண்டு உன்னைச் சிறு பெயரைச் சொல்லி, கண்ணா! என்று அழைப்பதற்காகச் சினந்தருளாதே.

தலைவா! நாங்கள் விரும்புவதைத் தருவாயாக.

## திருப்பாவை—உகூ

சிற்றம் சிறுகாலே
வந்துஉன்னைச் சேவித்து,உன்
பொற்றா மரைஅடியே
போற்றும் பொருள்கேளாய்,
பெற்றம்மேய்த்து உண்ணும்
குலத்தில் பிறந்து,நீ
குற்றேவல் எங்களைக்
கொள்ளாமற் போகாதே;
இற்றைப் பறைகொள்வான்
அன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழ்ஏழ்
பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்;
உனக்கேநாம் ஆட்செய்வோம்;
மற்றைநம் காமங்கள்
மாற்றேல்,ஓர் எம்பாவாய்!

## உகூ—ஆவது பாட்டின் பொருள்

வைகறையிலே வந்து உன்னை வணங்கி, உன்னுடைய தாமரைபோன்ற பொன்னடிகளைப் போற்றுதற்குப் பொருளைக் கேட்பாயாக.

மாடு மேய்த்துச் சாப்பிடும் வகுப்பிலே நீ பிறந்தும் எங்களைச் சிற்றடிமைகளாகக் கொள்ளாமல் போய் விடாதே;

நாங்கள் உன்னை அடைந்தது இன்றைக்குப் பறையைப் பெற்றுக் கொண்டு போய்விட அல்ல.

கோபாலா! எந்தக் காலத்தும் ஏழ் ஏழு பிறவிகளிலும் உன்னோடு பொருந்தியே வாழ்வோம்; உனக்குத்தான் நாங்கள் தொண்டு செய்வோம்.

எங்கட்கு வேறு ஆசைகள் தோன்றுமானல் அவற்றை நீ மாற்றியருளல் வேண்டும்.

இத்திருப்பாவைக் கருத்து, "முன்னைப் பழம் பொருட்கும்" என்ற திருவெம்பாவைக் கருத்தோடும் "உங்கையிற்பிள்ளை" என்ற திருவெம்பாவைக் கருத்தோடும் ஒருவாறு ஒத்தது.

## திருப்பாவை—௩௰

வங்கக் கடல்கடைந்த
   மாதவனை, கேசவனை,
திங்கள் திருமுகத்துச்
   சேயிழையார் சென்றுஇறைஞ்சி,
அங்குஅப் பறைகொண்ட
   ஆற்றை, அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல்
   பட்டர்பிரான் கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை
   முப்பதும் தப்பாமே,
இங்குஇப் பரிசுஉரைப்பார்,
   ஈர்இரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச்
   செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்று
   இன்புறுவர், எம்பாவாய்!

## ௩௦-ஆவது பாட்டின் பொருள்

கப்பல்கள் ஓடும் கடலைக் கடைந்து அமரர்க்கு அமுதம் ஈந்த மாதவனை, கேசவனை, சந்திரன் போன்ற அழகிய முகத்தைப் பெற்ற, செவ்விய ஆபரணம் அணிந்த பெண்கள், சென்று வணங்கி, அவ் ஆய்ப்பாடியில் பறை கொண்ட வரலாற்றை, அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூரிலே பிறந்த குளிர்ந்த பசுமையான தாமரைமாலையையுடைய பெரியாழ்வாரின் மகளாகிய ஆண்டாள் சொன்ன, யாவரும் கூடிப்பாடி ரசிக்கத் தக்க தமிழ்ப் பாமாலையாகிய இத்திருப்பாவை முப்பதையும் தவறாமல், இவ்விடத்து இவ்வகையாகச் சொல்லுபவர், நான்கு பெரிய மலை போன்ற தோள்களையுடைய, செந்தாமரைக் கண்களைத் திருமுகத்திலே பெற்ற, செல்வத் திருமாலாலே, எங்கும் திருவருள் நோக்கம் பெற்று இன்பத்தை எய்துவர்.

திருப்பாவை
முற்றுப் பெறுகிறது.

# பாட்டு முதல் குறிப்பு அகராதி

# பாட்டு முதல் குறிப்பு அகராதி

| தொடர் எண் | பாட்டு முதல் | பக்க எண் |
|---|---|---|
| 14. | ஒருத்தி மகனாய் | .... 107 |
| 15. | ஒள்நித்தில நகையாய் | .... 9 |
| 16. | ஓங்கி உலகுஅளந்த | .... 55 |
| 17. | ஓர்ஒருகால் எம்பெருமான் | .... 35 |
| 18. | கற்றுக் கறவை | .... 75 |
| 19. | கறவைகள் பின்சென்று | .... 113 |
| 20. | கனைத்துஇளம் கற்றுஎருமை | .... 77 |
| 21. | காதுஆர் குழைஆட | .... 33 |
| 22. | கீசுகீசு என்றுஎங்கும் | .... 65 |
| 23. | கீழ்வானம் வெள்என்று | .... 67 |
| 24. | குத்து விளக்குஎரிய | .... 91 |
| 25. | கூடாரை வெல்லும்சீர் | .... 111 |
| 26. | கோழி சிலப்ப | .... 19 |

## பாட்டு முதல் குறிப்பு அகராதி

## பாட்டு முதல் குறிப்பு அகராதி

